# ஆண்ட்ரோக்கிளிஸின் நண்பன்

பால் கால்டோன்

தமிழாக்கம் தேக்கம்பட்டு ராம்ஸ்



மிகவும் சாதுவான அடிமை ஆண்ட்ரோக்கிளிஸ் சுதந்திரத்திற்காக ஏங்குகிறார். இரக்கமற்ற முதலாளியிடமிருந்து தப்பிக்க அவர் ஒரு அடர்ந்த காட்டுக்குள் புகுந்தார். அங்கே காயமடைந்த ஒரு சிங்கத்தை எதிர்கொண்டபோது ஆண்ட்ரோக்கிளிஸ் பயந்து போனார். ஆனால் காயமடைந்த சிங்கத்தின் மீதான பரிதாபம் அவரது பயத்தை வெல்ல, அவர் சிங்கத்திற்கு உதவுகிறார்.

வேடிக்கையான இந்த ரோமானிய பழங்கதை கோழைகளுக்கு தைரியமளிப்பது தைரியசாலிகளை உற்சாகப்படுத்துவது. பால் கால்டோன் புதிய வரிகளில் மெருகூட்டி இன்றைய தலைமுறைக்கு கொடுத்திருக்கிறார்.



முன்னொரு காலத்தில் ரோம் நகரத்தில், ஆண்ட்ரோக்கிளிஸ் என்ற ஒருவர், ஒரு இரக்கமற்ற முதலாளியிடம் அடிமையாய் இருந்தார். "எனக்கு எப்போது விடுதலை கிடைக்கும் ?" என்று தினமும் புலம்புவார். ஒரு நாள் இரவு எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும்போது தப்பித்து ஒரு அடர்ந்த காட்டிற்குள் ஓடினார்.



காட்டிற்குள்
அலைந்து திரிந்த
அவர் பசியால்
வாடி களைத்துப்
போனபோது
திடீரென்று.....

வலியோடு முனகிக்
கொண்டிருந்த ஒரு
சிங்கத்தை வழியில்
பார்த்தார்





பயந்துபோன அவர் அடித்துப்பிடித்து ஓட ஆரம்பித்தார்.
ஆனால் சிங்கம் அசையவே இல்லை. இன்னமும் சத்தமாக முனகியது. ஆண்ட்ரோக்கிளிஸ் திரும்பி மெதுவாக சிங்கத்திடம் போனார். அப்போது கூட சிங்கம் அசையவே இல்லை.
சிங்கத்தின் வீங்கிப் போன வலது முன்னங்காலில் இருந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்ததைப் பார்த்தார். அதன் காலில் ஒரு பெரிய முள் தைத்திருந்தது.



ஆண்ட்ரோக்கிளிஸ் அந்த முள்ளை கையால் தொட்டவுடன் சிங்கம் வலியால் பயங்கரமாய் உறுமியது.

பயம் நடுக்கினாலும், ஆண்ட்ரோக்கிளிஸ் முள்ளை சட்டென்று வெளியே இழுத்தார்.



சிறிது நேரத்தில் சிங்கத்தால் எழுந்து நிற்க முடிந்தது.
பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்த
ஆண்ட்ரோக்கிளிஸை ஒரு நாய்குட்டி போல நக்கிக்
கொடுத்தது சிங்கம்.
சிங்கம் ஆண்ட்ரோக்கிளிஸை தலையால் முட்டியது.
தன் பின்னால் வரச் சொல்லுகிறது என்று
ஆண்ட்ரோக்கிளிஸ் புரிந்து கொண்டார்

அவர்கள் சிங்கத்தின்
குகைக்கு போய்
சேர்ந்தார்கள்.



களைத்துப் பொயிருந்த ஆண்ட்ரோக்கிளிஸ் ஒரு நண்பன் கிடைத்த நிம்மதியில் அயர்ந்து தூங்கினார்.

ஒவ்வொரு நாளும் சிங்கம் அவருக்கு இறைச்சி கொண்டு வந்து கொடுக்கும்.

இருவரும் ஆனந்தமாய் வாழந்தனர் சில நாள். . .







ஒரு நாள் சிங்கம் வேட்டையாட போயிருந்த சமயம் ஓடிப்போகும் அடிமைகளைப் பிடிக்கும் சிப்பாய்க் கூட்டம் அங்கு வந்தது.

குகையில் தூங்கிக் கொண்டிருந்த ஆண்ட்ரோக்கிளிஸை கையைக் கட்டி இழுத்துப் போனார்கள்.



அந்தக்காலத்தில் ஓடிப்போகும் அடிமைகளுக்கு என்ன தண்டனை தெரியுமா? பெரிய மைதானத்தில் ஒரு சிங்கத்துடன் சண்டை போட வேண்டும். இதை அரசரும் பொதுமக்களும் ஒரு விளையாட்டுப் போட்டி போல பார்த்து மகிழ்வார்கள்.

போட்டி நாள் வரும்வரை ஆண்ட்ரோக்கிளிஸை சிப்பாய்கள் ஒரு இருட்டறையில் அடைத்து வைத்தார்கள்.

அந்த அறைக்கருகிலேயே, கூண்டில் அடைக்கப்பட்ட ஒரு ஆவேசமிக்க சிங்கமும் பட்டினியோடு இருந்தது. பசியால் அது பயங்கரமாக உறுமுவது ஆண்ட்ரோக்கிளிஸின் காதில் விழுந்துகொண்டே இருந்தது..





போட்டி நாளும் வந்தது. ஒளிமயமான பகல் பொழுது.
ஆண்ட்ரோக்கிளிஸ் மைதானத்திற்குள் தள்ளப்பட்டார். அவர் கண்கள் கூசின. போட்டியை பார்க்க வந்த கூட்டத்தின் ஆரவாரம் அவருக்கு திகிலூட்டியது.

சிரித்துக் கொண்டும் பேசிக்கொண்டும் வந்த பேரரசர் அவரது இருக்கையில் அமர்ந்தார். அவர் கையை தூக்கியதும் கூட்டம் நிசப்தமானது.



கூண்டு திறக்கப்பட்டது.
பசித்திருந்த சிங்கம் வெளியே
பாய்ந்து வந்தது.

ஆண்ட்ரோக்கிளிஸ் நடுநடுங்கிப்போனார். ஓடவோ ஒளிந்து கொள்ளவோ ஒருவழியும் இல்லை.

வெளியே வந்த சிங்கம் அவரைக் கண்டதும் வேகமாக பாய்ந்தது.

"அவ்வளவு தான், செத்தேன்." என்று விதியை நினைத்து அழுது கொண்டே கண்களை மூடியபடி சிங்கம் தன் மேல் பாயும் தருணத்திற்காக காத்திருந்தார்.





திடீரென்று உறுமல் சத்தம் நின்றது.

அவர் உடம்பு சிங்கத்தின் நகங்களால் கிழிபடவில்லை. கூரான பற்களால் கடிபடவில்லை.

சொரசொரவென்றும் ஈரம் சொட்டசொட்டவும் இருந்த ஒரு நாக்கு அவரை தலை முதல் கால் வரை நக்கியது!
அவருடன் நட்பாயிருந்த சிங்கம் தான் அது.

கூட்டம் மெய்சிலிர்த்தது.

"அடிமையையும்
சிங்கத்தையும் விடுதலை
செய்" என்று எங்கும் கூச்சல்.



அரசர் பிரமிப்பில் வாயடைத்துப் போயிருந்தார்.

ஆண்ட்ரோக்கிளிஸை கூட்டி வரச் செய்து விசாரித்தார்.

"அரசே, நான் . . ." என்று ஆண்ட்ரோக்கிளிஸ் ஆரம்பித்தார்.

அவர் கதையைக் கேட்ட அரசர், அவரையும் சிங்கத்தையும் விடுதலை செய்ய உத்தரவிட்டார்.





சிங்கமும் ஆண்ட்ரோக்கிளிஸும்
சேர்ந்து நடந்தார்கள்,

சுதந்திரமாக!

முற்றும்